## காமன் வெல்த் நிதிமந்திரிகள் மகாநாடு:—

காமன் வெல்த் நாடுகளின் "பாங்கி" யாக இருப்பது பிரிட்டன். அதாவது இந்தியா, பாகிஸ்தான் போன்ற நாடுகள் காமன் வெல்த்திற்கு வெளியேயுள்ள நாடுகளுடன் வியாபாரம் பண்ணுவதெனில் பவுன் நாணயத்தின் மூலம் மாத்திரமே சாத்தியம். தங்கள் சொந்த தேச நாணயங்கள் பவுன்களாக மாற்றப்பட்டு அளிக்கப்படவேண்டும். அதேவிதமாக, காமன் வெல்த்திற்கு வெளியேயுள்ள நாடுகள் காமன் வெல்த் நாடுகளுடன் வியாபாரம் செய்ய வேண்டுமெனில் தங்களுடைய நாணயங்களை பவுன்களாக மாற்றிக் கொடுக்கவேண்டும். காமன் வெல்த் நாடுகளின் "பாங்கி" யாக இவ்விதம் பிரிட்டன் இருப்பதின் மூலம் லாபம் கிடைத்தால் அது பிரிட்டனுக்கு சேரும்; நஷ்டம் வந்தால் அது காமன் வெல்த் நாடுகளின் தலையில். அதாவது காமன் வெல்த் நாடுகளை சுரண்டிக் கொழுக்கவும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு மிகவும் உகந்ததொரு முறையாக இந்த ஏற்பாடு உள்ளது.

இன்று உலகத்தில் அமெரிக்க டாலரின் தேர் சக்கரத்தில் பவுன் கட்டப்பட்டிருப்பதாலும், பவுனுடன் காமன் வெல்த் நாடுகளின் நாணயங்களும், இந்தியாவின் ரூபாயும் இணைக்கப்பட்டிருப்பதாலும் அமெரிக்க-பிரிட்டிஷ் பொருளாதார நெருக்கடி இந்தியாவையும் மற்ற காமன் வெல்த் நாடுகளையும் கண்டிப்பாக பாதிக்கிறது. இதனால்தான் பவுன்-டாலர் நாணய மாற்று விகிதம் 1949 செப்டம்பரில் குறைந்து மாற்றப்பட்ட பொழுது இந்தியாவும் அதே அளவு டாலரின் ரூபாய் மதிப்பை குறைத்தது. பெரும்பாலான நாடுகளில் இதே நிலைமை ஏற்பட்டதும் அறிந்ததே. காமன் வெல்த் நாடுகள்-பிரிட்டன் உட்பட அமெரிக்காவுடன் செய்யும் வியாபாரத்தில், அமெரிக்காவிடம் வாங்குவதைவிட அதிகமாக விற்பதன் மூலம் உபரியாக சேர்க்கப்பட்டதே, டாலர் கையிருப்பு என்று கூறப்படுகிறது. பிரிட்டனின் இந்த டாலர் சேமிப்பு இன்று வெகுவாக குறைந்து விட்டது.

1946ல் 269 கோடி 60 லட்சம் இருந்த டாலர், தங்க சேமிப்பு 1949 செப்டம்பரில் 142 கோடி 50 லட்சம் டாலராக குறைந்தது. பிரிட்டன் டாலரின் பவுன் மதிப்பை குறைத்து நிலைமையை சமாளிக்க முற்பட்டது. இதைத் தவிர இன்னும் பல காரணங்களால் 1951 ஜூன் மாத இறுதியில் டாலர் சேமிப்பு 386 கோடி 70 லட்சமாக உயர்ந்தது. 1951 டிசம்பரில் 228 கோடி 90 லட்சம் டாலராக குறைந்து விட்டது. அதாவது 6 மாதங்களில் 157 கோடி 80 லட்சம் டாலர் செலவாகிவிட்டது. இதே விகிதத்தில் செலவானால் இவ்வருடம் ஆகஸ்ட் மாதத்திற்குள் டாலர் சேமிப்பில் ஒரு பைசாகூட இல்லாமல் காலியாகிவிடும். என்று நிதி மந்திரி பட்லர் கூறுகிறார். பிரிட்டனின் ஆயுத வளர்ப்புக் கொள்கையும், அதனுடைய வியாபார தொழில்கள் மீது அமெரிக்காவிற்கு உள்ள பிடிப்பும் இன்றைக்கு பிரிட்டனை ஒரு கடுமையான நெருக்கடிக்குள்ளாக்கியது.

1946 முதல் 1950க்குள் பிரிட்டன் மொத்தம் 600 கோடி பவுன் (9 ஆயிரம் கோடி ரூபாய்) ராணுவத்திற்காக செலவு செய்துள்ளது; அதாவது யுத்தத்திற்கு முந்தி செலவு செய்ததைவிட 7 மடங்கு அதிகமாகும். 1951ம் வருட பட்ஜெட்டில் 292 கோடி பவுன் யுத்தச் செலவுகளுக்கு ஒதுக்கப்பட்டது. பிரிட்டனின் பிரமாண்டமான ஆயுத வளர்ப்பு திட்டத்தால் மக்களுக்கு உபயோகமான பொருள் உற்பத்தி தடைபட்டது. 1937-ஐ விட 1950ல் ஜவுளி உற்பத்தி 42 சதவிகிதம் குறைந்தது; வீடுகட்டுவது 50 சதவிகிதமும் கால்ஜோடு உற்பத்தி 80 சதவிகிதமும் குறைந்தது. அதே சமயத்தில் உருக்கு உற்பத்தி 25 சதவிகிதமும், விமான உற்பத்தி 80 சதவிகிதமும், ராணுவத்திற்கு அவசியமான ரஸாயனப் பொருள் உற்பத்தி 97 சதவிகிதமும்.

பிரிட்டனின் யுத்தப் பொருள் உற்பத்திக்கு அவசியமான மூலப் பொருள்களை அதிக விலையில் அமெரிக்காவிலிருந்து பிரிட்டன் இறக்குமதி செய்கிறது. 1937ல் பிரிட்டனின் இறக்குமதி ஏற்றுமதி விலைகள் 100 என்று வைத்துக் கொண்டால் 1948ல் ஏற்றுமதி (விற்கும்) விலைகளைவிட இறக்குமதி (வாங்கும்) விலைகள் 21 அதிகமாகவும், 1949 மார்ச் மாதத்தில் 29 அதிகமாகவும், 1950 அக்டோபரில் 68 அதிகமாகவும் இருந்தது. அமெரிக்காவிடமிருந்து அதிகவிலையால் இறக்குமதி செய்வதும், குறைந்த விலையில் ஏற்றுமதி செய்வதுமான இந்த நிலைமையும் பிரிட்டனின் டாலர் சேமிப்பு குறைவதற்கு ஒரு முக்கிய காரணம். இன்று அமெரிக்கா தனது உலக ஆதிக்கத்திற்காக பல்லாயிரம் கோடி டாலர் செலவு செய்து பிரமாண்டமான ஆயுத வளர்ப்பில் இறங்கி, உலகத்திலுள்ள சகல மூலப் பொருள்களையும் சேகரம் செய்து, தனது பிடிப்பில் கொண்டுள்ளதால் இன்று பிரிட்டன் அமெரிக்காவிடமிருந்து தனது அத்தியாவசிய பொருள்களைப் பெற வேண்டியுள்ளது.